இறை: நும் தனம் போலிருக்கிறது.

காரிகையர்: பெருமானே நும் கந்தரம் கறுத்ததேனோ? (கந்தரம் : கழுத்து)

இறை: கந்தரம் கறுத்தது மழை பொழியத்தான் – வேறெதற்கு (கந்தரம் : மேகம்).

மின்னிடையார்: உம் உத்தரம் யாது ! விளங்கச் சொல்லும் (உத்தரம் : பதில்)

இறை: தெற்கே நின்ருல் தெரியத் தோன்றுமே அது. (உத்திரம் : வடக்கு)

இவ்வாறு வம்புசெய்த அம்பன்ன கண்ணர் இறைவனை நெருங்கிவந்து அவர்விழியுள் தம்முருவைக் காண்கின்றனர். பின்பு கொஞ்சும் குயிலெனக் குழறிக் கொடியனையார் பலர் நும் கண்ணுள்ளாரே ! எம்மையும் கைக்கொண்டு அருளுக என வேண்டினர். செஞ்சடைப் பிரானும் அவ்வஞ்சியரை நெருங்கி அவர் விழியில் தம்முருக் கண்டு நம்மினும் மிக்காராகிய ஒருவர் நும்விழியிடை உள்ளார். அவரை விழித்துக் கண்டுகொள்க என்று கூறி அகன்ருர். அஞ்சலிப்பாரும், அடியில் தாழ்வாரும், வளைக்கை கொண்டு தழுவ வருவாருமென மயங்கி மாதர் வாடினர். பின்பு எம் கைவிட்டுக் கழன்ற வளையல்களையாவது மீள இடுங்கள் என்று வேண்ட நாளை வந்திடுவோம் எனக்கூறி நம்பன் மறைந்தான்.

சாபம் பெற்ற பாவையர் :

பிள்ளை வெண் திங்கள் வேய்ந்த பிரான் கொண்டுபோன நாணமும் உள்ளமும் மீட்க வகையறியாது வாடிய பத்தினியர்களை முனிவர்கள் கண்டனர். பசலைபூத்து கலையும் கற்பும் இழந்து ஐங்கணையான் அம்புக்கிடனுன ஆவமென (அம்பு அருத் தூணி) நிற்கும் அழகிகளைக் கண்ட கணவர்கள் தம் தவவலியால் கூடல்நாயகனே இவ்வாடலைப் புரிந்தான் என்றுணர்ந்தனர். கற்புநிலை திரிந்த நீவிர் யாவரும் கூடல் நகரின் வணிகக் குலக் கன்னியராய்த் தோன்றுவீர் என்று சாபந்தர அவர்கள் எங்களுக்கு விடுதலை எப்போது என்று கேட்க முனிவர்களும் மதுரைக்கரசன் சோமசுந்தரப்பெருமான் வந்து உங்கள் கைதீண்ட சாபம் நீங்கும் என்றருளினர்.

**வளையல் விற்ற வடிவழகன் :-**

அப் பழங்கதைப்படித் தாம் கவர்ந்த வளையல்களையே இப்பொழுது விற்க வருகிறார் இறைவன். அப்பெண்களும் தம் சாபவிதிப்படியே வணிகர் குலத்தில் பிறந்துள்ளார். இப்பொழுது அவர்கள் பேதையிளம் பருவங்கடந்து காதலரும்பும் கன்னிகளாக விளங்குகிறார்கள்.

எண்தோளுடைய எழிலன் கங்கை கரந்து கண்டங் கரந்து, இடப்பாலுள்ள மங்கை வடிவத்தையும் மறைத்து வளையல் சுமந்து கூவி வருகின்றான்.

வளையலோசையும் அதைச் சொல்லும் வணிகரோசையும் கேட்டு மாளிகையை விட்டு வாயிலுக்கு வந்தன மயில்கள். எங்கள் செங்கைகளுக்கேற்ற வளையல்களை இடுமின் என்று மங்கையர்கள் வணிகரிடம் கை காட்ட அகத்தெழு காதலைக் கண்காட்டின. மடவார் செங்கைபற்றிய புங்கவன் வளையல்களைக் கைகளிலும் மையலை மனத்திலுமாக ஏற்றினான்;

அடுக்கிய வளைகளையெல்லாம் உடைத்து விட்டு மீளவும் வந்து அழகனிடம் கைநீட்டினர் மைதீட்டினர். மலர்க்கணைகள் பட்டு மேனியிளைக்க அடுக்கிய வளை சரிந்தது. பின்னும் சிறிய வளைகளை அணிவியுங்கள் என்று சிலர் வந்தனர்.

**காதல் கொண்டார் கருக்கொண்டார் :-**

தாங்களிடும் வளைகளுடன் எம் மேகலைகளும் சரிகின்றனவே யென்று மைவாள் விழியில் மையல் காட்டிய மாதர்களை ஐயன் கையால் தீண்டிய காரணத்தால் அவர்கள் கருப்ப முற்றனர்.

வளையலுக்குரிய பொருளைப் பெற்றுக்கொள்ளுங்கள் என அப்பெண்கள் அழைக்க பெருமான் நாளை வருவோம் என நவின்றகன்றான். வணிகப் பெண்களுடன் மற்றையோருங் காண சிவலிங்கத் திருவுருவுள் தன்னுருக் கரந்தான்.

வேலெடுத்த வீரனும் முருகனையொத்த இளஞ்சிறார்களை அப்பூவையர் பெற்றனர். அவர்களை வீரக்காளையர்களாக வளர்த்துப் பின்னை பேரின்பப்பேறுற்றனர், அம்பலத்தாடும் ஐயன் இணையடிகளில் ஒன்றிய போகம் பெற்றனர் வணிகக் கன்னியர்.

(வளரும்)



# திருமந்திரம் - குறிப்புரை

திருக்குறள்வேள்,

திரு. ஜி. வரதராஜப் பிள்ளை B. A,

( மலர் 29, இதழ் 8, பக்கம் 422 இன் தொடர்ச்சி )

97. மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலு மாமே.

குறிப்புரை :- வாய்மொழி - பாடல். இன்னிசை உள்ளே எழுகின்ற-சுழுமுனையில் நாதமாக எழுகின்ற. சுழுமுனைக்கு வீணை என்ற பெயர் உண்டு என்பது அறிக. பிரமனும் உன்னும் - பிரமனும் தியானிக்கும். உணரலும் ஆமே - உணர முடியாது.

வாய்மொழிப்பாடலாலே அறியமுடியாது என்று அவையடக்கம் கூறியவாறு.

98 தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவருந் தேவரும்
ஒத்துடன் வேறு யிருந்து துதிசெய்யும்
பத்திமை யால்இப் பயனறி யாரே.

குறிப்புரை :- தாழ்வரை - கயிலையின் அடிவாரம். முத்திக் கிருந்த - முத்தியை விரும்பியிருந்த.

முனிவரும் தேவரும் வேருயிருந்து துதிசெய்வதால் தத்துவ ஞானத்தின் பயனைப் பெறவில்லை என்பதாம்.

## 7. திருமந்திரத் தொகைச் சிறப்பு

99. மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே.

குறிப்புரை :- நந்தி அருளது நந்தி அருளால் உரைத்தது. கருத்தறிந்து - பொருளுணர்ந்து ஞாலத்தலைவன் - உலக நாயகன்.

100 வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவாயிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவாயிரம்பொது
வைத்த சிறப்புத் தருமிவை தானே.

குறிப்புரை :- வகைவகை - ஒன்பது தந்திர வகை. பூர்வத்து - பழமையான.

மூவாயிரம் பாடலில் முதல் ஐந்து தந்திரம் பொது என்றும் இறுதி நான்கு தந்திரம் சிறப்பு என்றும் கொள்க.

## 8. குருமட வரலாறு

101. வந்த மடமேழு மன்னுசன் மார்க்கத்தின்
முந்தி உதிக்கின்ற மூலன் மடவரை
தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரஞ்
சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே.

குறிப்புரை :- மடம ஏழு, விரிவு அடுத்த பாடலில் காண்க. மூலன் மடவரை - மூலர் மடத்தில். சார்வு மூவாயிரம் - சார்ந்த மூவாயிரம் - பாடல்கள்.

முன்னே தோன்றிய மடத்தின் தலைவராகிய மூலன் அழகிய ஆகமத்தை மொழிந்தான் என்பதாம்.

102 கலந்தருள் காலங்கர் தம்பால் கோரர்
நலந்தரு மாளிகைத் தேவர்நா தாந்தர்
புலங்கொள் பரமானந் தர்போக தேவர்
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே.

குறிப்புரை :- மடத்துத் தலைவர் எழுவர் - காலாங்கர், அகோரர், மாளிகைத்தேவர், நாதாந்தர், பரமானந்தர், போக தேவர், மூலர் ஆகிய எழுவர். நிராமயத்தோர் - பிறப்பற்றோர்.

## 9 திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமை

103 அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் நாலும் உணரில்
தளர்விலன் சங்கரன் தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அரிஅயற் காமே

குறிப்புரை :- அந்தம் - அழகு. தளர்விலன் - குறைந்தவனல்லன். இளமையால் அழகால் இறுதியால் காலத்தால் ஆராய்ந்தாலும் சங்கரன் குறைந்தவன் அல்லன் என்க. அடியார் சொல் - அடியார் புகழ்ந்து சொல்லும். ஆமே - ஆகாது.

104 ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின றார்களே

குறிப்புரை :- ஆதிப்பிரான் - உருத்திரன். அணிமணி வண்ணான் - திருமால். அலர்மிசையான் - பிரமன். தொடர்ச்சி - தோன்றிய சம்பந்தம்.

மூவரும் ஒருவரே என்னாது பிணங்குகின்றாரே என்று இரங்கியவாறு.

105 ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்
பீசம் உலகிற் பெருந்தெய்வ மானது
ஈசன் அதுஇது என்பர் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் தூரறந் தார்களே.

குறிப்புரை :- பீசம் - வித்து. தூசு - தூய்மை. தூரு - மூலம் தூய்மையானவர்கள் இருவினைக்கப்பால் மூலப்பொருளாகவுள்ள ஈசனை உணர்ந்தவராவர் என்பதாம்

106 சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றாகும்
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதல் சங்கரன் தன்பெயர் தானே.

குறிப்புரை :- சிவன் முதல் மூவரோடு ஐவர் - சதாசிவன், மகேசன், உருத்திரன் ஆகியமூவருடன் திருமால்பிரமன் என்னும் ஐவர் ஆறிரண்டொனறொடொன்று - பத்து. மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம் விசுத்தி, ஆக்ஞை, ஆறுதாரம் கவிழ்ந்த சகஸ்ரதளம், நிமிர்ந்த சகஸ்ரதளம் இரண்டு விந்து நாதம் இரண்டு. 6+2+1+1=10 சபைகளில் விளங்குவர். இந்த சபைகளில் விந்து நாதங்கள் சிறப்பு அடையும்போது பத்து சபைகளுக்கும் தலைவரான சங்கரன் விளங்குவர் என்க.

இந்துணையும் சிற்றம்பல நாதனது பெயரேயாம் என்பதாம்.

(தொடரும்)

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கொற்றங்குடி உமாபதிதேவ நாயனுர்

அருளிச்செய்த

# திருவருட் பயன்

## விளக்க உரை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான், முதுபெரும்புலவர்,

**திரு. சி. அருணைவடிவேலு முதலியார்.**

**நூற்பெயர் விளக்கம் :**

'திருவருள்' என்பது காரிய ஆகுபெயராய் அதனைத் தெளிவிக்கும் மெய்ந்நூல்களைக் குறித்தது. 'பயன்' என்பது, 'திரண்ட பொருள்' என்பதாம். எனவே, 'திருவருட் பயன்' என்பது, 'திருவருளைத் தெளிவிப்பனவாய மெய்ந் நூல்களின் திரண்ட பொருளைக் கூறும் நூல்' என்பதாம். மெய்ந்நூல் - பொருளியல்புரைக்கும் நூல். இதனை, 'தத்துவ சாத்திரம்' என்பர். 'திரண்ட பொருளைக் கூறுவது' எனவே, 'தொகுத்தல் யாப்பான் அமைந்தது' என்பது அறியப்படும். 'திரு' என்னும் அடை புணர்த்தமையால், அருள் 'இறைவ னுடையது' என்பது விளங்கும்.

பொருளியல்புகளை உள்ளவாறு பொதுவாக உணர்த்து வன, 'வேதாந்தம்' எனப்படும். உபநிடதங்கள் என்பதும், சிறப்பாக உணர்த்துவன. 'ஆகமாந்தம்' எனப்படும், சைவாகம ஞானபாதங்கள் என்பதும், அவற்றின் உண்மைப் பொருள் தானும், திருக்கயிலையில் வீற்றிருந்தருளும் சீகண்ட பரமசிவனிடமிருந்து வரலாற்று முறையான் வரும் திருமரபில் நின்று கேட்பினன்றி விளங்கமாட்டாது என்பதுமே ஆசிரியர் துணிபாகலின், அங்ஙனம் தாம் கேட்ட நல்லாசிரியரது அருண்

மொழியும், அருள்நூலும் பற்றியே, சந்தானகுரவர் நால்வருள் ஈற்றில் நிற்பவராகிய கொற்றங்குடி உமாபதிதேவ நாயனுர் இந்நூலைச் செய்தருளுகின்ருர் ஆசிரியர் துணிபாக மேற் காட்டப்பட்ட துணிபு சைவ சித்தாந்தமேயாதல் அறிந்து கொள்க.

'உலகியல், மெய்ந்நெறி' என்னும் இருவகை நெறி களுள் உலகியலை உணர்த்துவதாய திருவள்ளுவ நாயனுரது திருக்குறளுக்குப்பின், மெய்ந்நெறி உணர்த்தும் திருக்குற ளாய் அமையுமாறு இதனைச் செய்தல் ஆசிரியரது கருத்து என்பது, நூலை, 'அகர உயிர்போல்' எனத் தொடங்குதலா லும், ஈரடிக் குறள்வெண்பா யாப்பினுலே நூன்முழுதும் அமையச் செய்தலாலும், பத்துக் குறள்கள் ஓரதிகாரமாக ஆக்குதலாலும் அறியப்படும். இதனை இந்நூலின் மூந்துரை ஆசிரியர் நிரம்ப அழகிய தேசிகர் செய்த "திருமகள் பிறந்த" என்னும் சிறப்புப் பாயிரத்தாலும் அறிக. வீட்டுநெறிப் பாலாக ஔவை குறள் இருப்பினும் அஃது யோகத்தையன்றிப் பொருளியல்பாகிய ஞானத்தைக் கூருமை அறிக.

இவ்வாறு செய்யப் புகுந்த ஆசிரியர், எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி இனிது முற்றுதற்பொருட்டு முதற்கண் இடையூறு நீக்கும் யானைமுகக் கடவுளை வாழ்த்துவதாகிய காப்புக் கூறுகின்ருர்.

காப்பு

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்

இதன் பொருள்:- நல் குஞ்சரக் கன்று நண்ணின், அருள் வடிவான யானைக்கன்ருகிய விநாயகக் கடவுளைப் புக லிடமாக அடைந்தால்; கலை ஞானம் - மெய்ந்நூ லறிவு; கற்கும் சரக்கு அன்று-கற்றுப் பெறும் பண்டமாகாது; 'தானே வரும்' என்றபடி.

உலகில் உள்ள யானைக்கன்றுகளினின்றும் பிரித்தற்கு, 'நல்' என்னும் அடைமொழி கொடுத்தார். யானை முகமும், பிள்ளைமையும் உடைமை பற்றிப் பிள்ளையாரை 'யானைக்

கன்று' என்றார். "கலை" என்றது, ஏற்புழிக் கோடலால், மெய்ந்நூலையே குறித்துநின்றது. 'தானே வரும்' என்றது 'எளிதின் வரும்' என்றவாறும். காண், முன்னிலையசை. முன்னிலையாயது நெஞ்சு என்க. 'நண்ணின் எளிதின் வரும்' என்றதனால், 'யாமும் நண்ணி, இந்நூலை எளிதின் முற்று விப்போம்' என்பது குறிப்பெச்சமாயிற்று.

## நூல்

சைவாகம ஞானபாதங்கள் பொருள்களை, 'பதி, பசு, பாசம்' என மூன்றாக வரையறுத்து, அவற்றின் இயல்புகளை, 'சொரூப லட்சணம், தடத்த லட்சணம்' என இருவகை யாகக் கூறும். பதி - கடவுள். பசு - உயிர். பாசம் - உயிர் களைப் பிணித்துள்ள கட்டு. இவை, முறையே, 'இறை, உயிர், தளை' எனத் தமிழில் சொல்லப்படும். சொரூப லட்சணமாவது, ஒருபொருள் பிறிதொன்றைச் சாராது தன் னளவில் நிற்கும் நிலையில் அதன்பாற் காணப்படும் தன்மை. தடத்த லட்சணமாவது, ஒருபொருள் பிறபொருளோடு சார்ந்து நின்றவிடத்து அச்சார்பு காரணமாக அதன்பாற் காணப்படும் தன்மை. எனவே 'சொரூப லட்சணம் இயற்கைத் தன்மை' என்பதும், 'தடத்த லட்சணம் செயற்கைத் தன்மை' என்ப தும் பெறப்படும். 'சொரூப லட்சணம், தடத்த லட்சணம்' என்பவற்றை முறையே, 'உண்மை இயல்பு, பொதுவியல்பு' எனத் தமிழில் மொழிபெயர்த்து வழங்குவர். அளவை நூலில் கூறப்படும், 'பொதுவியல்பு, சிறப்பியல்பு' என்பன வேறு. உண்மை இயல்பு, 'தன்னியல்பு' என்றும் சொல்லப்படும். சிலவிடத்து அது 'சிறப்பியல்பு' எனப்படுதலும் உண்டு.

மேற்கூறிய முப்பொருள்களுள் மேலானது பதிப்பொரு ளேயாதலின், அதன் இயல்பையே முதற்கண் கூறுகின்றார்.

### முதல் அதிகாரம்: பதிமுதுநிலை

அஃதாவது, இறைவனது பழமையான தன்மையைக் கூறுவது. இதன் முதல் திருக்குறள்,

" அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து "

என வரும்.

இது, பதி உண்மையை அளவையுடன் கூறுகின்றது. உண்மை – உளதாதல்.

இதன்பொருள் :– அகர உயிர்போல் - அகரமாகிய உயிரெழுத்துத் தானே இயங்கவும் பிற எழுத்துக்களை இயக்கவும் வல்லதாய்ப் பிற எல்லா எழுத்துக்களினும் இயைந்து வேறற நிற்றல்போல; நிகரில் இறை — தன்னோடு ஒப்பது ஒரு பொருளும் இல்லாத பதிப்பொருள்; அறிவாகி – தானே அறியவும்' பிறவற்றை அறிவிக்கவும் வல்ல பேரறிவுடையதாய் எங்கும் நிறைந்து நிற்கும் - பிற எல்லாப் பொருளிடத்தும் கலந்து வேறற நிற்கும்.

'எழுத்து' என்று ஒழியாது, 'உயிர்' என விதந்தது, 'தானே இயங்க வல்லது' என்பது உணர்த்துதற்கும், எல்லா உயிரையும் பொதுப்படக்கூருது, அகரத்தையே குறித்தது தானே இயங்குவதன்றியும் பிறவற்றை இயக்குதல்பற்றியுமாம். அதனல் அத்தன்மைகள் வெளிப்படையாகவைத்து உரைக்கப் பட்டன. அதனனே, "அறிவாகி" என்றதற்கும் உவமை பெறப்பட்டது. இது மறுபொருள் உவமமாகலின், எங்கும் நிறைந்து நிற்றலாகிய பொதுத்தன்மைக்கு ஏதுக்களும், இடங்களும் வேறு வேருயின.

உவமைக்கண், 'பிற எல்லா எழுத்துக்களினும்' என்றதனை, 'உயிரும் மெய்யும் ஆகிய இருதிறத்து எல்லா எழுத்துக்களினும்' என்றும், பொருட்கண் 'பிற எல்லாப் பொருளிடத்தும்' என்றதனை, 'சித்தும், ச மும் ஆகிய பிற எல்லாப் பொருளிடத்தும்' என்றும் விரித்துரைத்துக் கொள்க சித்து - அறிவுடையது. சடம் - அறிவில்லது. பிற பொருள்கள், பசுவும், பாசமும். பசு - சித்து, பாசம் - சடம். "நிற்கும்" என்றது, 'நின்று இயக்கும்' என்றவாறேயாம்.

"அ ஆ ஆஇரண்டு அங்காந் தியலும்"*

என்றவாறு, எழுத்துக்களைச் சொல்ல முயலும் முயற்சிகளுள் முதல் முயற்சியாகிய அங்காத்தல் நிகழ்ந்தபொழுதே அகரம் பிறந்து நிற்றலானும், அம் முதல்முயற்சியின்றிப் பிற முயற்சி

* தொல் - எழுத்து, பிறப்பியல்.

கள் நிகழ்தல் கூடாமையானும் பிற முயற்சிகளால் பிறக்கும் பிற எல்லா எழுத்துக்களிலும் அகர உயிர் கலந்து வேறற நிற்றலும், நின்று அவற்றை இயக்குதலும் அறியப்படுமாறு உணர்க. இவ்வுண்மை நோக்கியே,

"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" $

என, 'தனி மெய்களைச் சொல்லுமிடத்து யாதொரு மெய்யினை யும் அகரத்தொடு கூட்டியே சொல்லுதல் வேண்டும்' என ஆணை தந்தனர், தமிழாசிரியர். ஒலிவடிவில் தனி மெய்கள் இவ்வாருகவே, வரிவடிவிலும் அவை அவ்வாருதல் வேண் டும் என்பது சொல்லாமே அமைந்தது. எனவே, தனி மெய் கள் வரிவடிவில் புள்ளியொடு நிற்றல் மொழியிடத்தே யாயிற்று.

திருவள்ளுவ நாயனர் ஆதி பகவனது முதலாந் தன் மைக்கு அகரத்தை உவமையாகக் கூறியதனை விளக்குமிடத்து, "முதல்" என்றதனை, 'தலைமை' எனக் கொண்டு விளக்க உரை கூறினர் பரிமேலழகர். தலைமைப் பொருளே, 'உடைப் பொருள்' எனப்படும். உடைப் பொருட்கும் உடைமைப் பொருட்கும் உள்ள தொடர்பு, அரசனுக்கும், அவனது வெண் கொற்றக் குடை, செங்கோல், மணிமுடி முதலியவற்றிற்கும் உள்ள தொடர்புபோல வேற்றுமைத் தொடர்பாவதன்றி, உயிருக்கும், உடம்பிற்கும் உள்ள தொடர்புபோல ஒற்றுமைத் தொடர்பன்ருகலானும், ஆதி பகவற்கும், உலகிற்கும் உள்ள தொடர்பு வேற்றுமைத் தொடர்பாகாது, உடலுயிர்போல ஒற்றுமைத் தொடர்பே ஆகலானும், "ஆதி பகவன் முதற்றே உலகு" என்பதில், "முதல்" என்றதற்கு, 'உலகின் இயக் கத்திற்கு அடிநிலையாதல் என்பதே பொருள்' என்பதும் இத்திருக்குறளானே விளங்கும். 'இயக்கம்' என்பதனை உயிர்கட்குச் செயற்படுதலோடு அறிதலும் கொள்க.

'உலகத்தின் இயக்கத்திற்கேயன்றி உயிர்களின் இயக்கத் திற்கும் இறைவனே அடிநிலை' என்பதற்குத் திருப்பாடல் மேற்கோள்,

---

$ தொல். எழுத்து, மொழிமரபு.

"போற்றி என் வாழ்முத லாகிய பொருளே"

என்றற் றொடக்கத்தன. இதனால், 'இறைவன் உலகிற்கு முதலாதலாவது, அவற்றின் இயக்கத்திற்கு அடிநிலையாய் நிற்றல் என்பதே சைவசித்தாந்தம்' என்பது விளங்கும். இறைவன் உலகத்தின் அனைத்து இயக்கத்திற்கும் அடிநிலையாதலோடு இயற்கையாய பேரறிவுடையன் எனவே, அவன் அவை அனைத்திற்கும் தலைவனாய் உடைப்பொருளாதல், தானே பெறப்படும் "முதற்றே" என்பதனால் குறிப்பிற் பெறப்பட்ட தலைமையை இனிது விளக்கவே திருவள்ளுவர் பின்பு இறைவனை 'வாலறிவன்' எனக்குறித்தார்.

பிற எல்லாவற்றிலும் நிறைந்து நிற்றல் அளவிற்கு அகரம் உவமையாகக் கூறப்பட்டதாயினும், உண்மையில் இறைவன் தன்னிகரில்லாத தனிப்பெரும் பொருளே' என்றற்கு, "நிகரில் இறை" என்றார். திருவள்ளுவரும், "தனக்குவமை இல்லாதான்" என இறைவனது தனிமையைக் குறித்தார்.

'இறைவன் தன்னிகரில்லாத் தனியனே' என்றற்குத் திருப்பாடல் மேற்கோள்,

"மற்றாருந் தன்னொப்பார் இல்லாதானை"
(திருமுறை - 6. 1. 2.)

"ஒப்புடைய னல்லன்; ஒருவ னல்லன்
ஓரூரன் அல்லன் ஓர் உவமன் இல்லி"

என்றற் றொடக்கத்தன.

"அகர உயிர்போல்" என்ற உவமையானே, உயிரும், மெய்யும் ஆகிய எழுத்துக்களின் இயக்கத்திற்கு அகர உயிர் இன்றியமையாததுபோல, சித்தும், சடமும் ஆகிய உலகத்திற்குப் பதி இன்றியமையாதது' என இதனால் பதி உண்மை அளவையுடன் கூறப்பட்டவாறு அறிக. "அகர முதல எழுத்தெல்லாம்" என்ற குறளால் திருவள்ளுவரும் முதற்கடவுள் உண்மையே கூறினார்.

இனி இரண்டாவது திருக்குறள்,

" தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான் "

என வரும்.

இது, மேல், " அகர உயிர்போல் " எனக் காட்டிய உவமை பற்றி வருவதோர் ஐயத்தை நீக்குகின்றது.

அஃதாவது, 'எழுத்துத்தோறும் நிறைந்து நின்று அவற்றை இயக்கும் அகர உயிர் ஒன்ருகாது அவ்வவற்றிற்கும் வெவ்வேருய்ப் பலவாம் ஆகலின், அவ்வகரமாகிய உவமையால் அறியப்படும் பதியும் அவ்வாறே ஒன்ருகாது பலவாதல் பெறப்படும். படவே' " நிகரில் இறை " எனப் பதிக்குத் தனிமை கூறியது பொருந்தாதுபோலும் ' என்னும் ஐயத்தினை அப் பதியது இயல்பு கூறும் முகத்தான் நீக்குகின்றது இத் திருக்குறள் என்க.

இதன் பொருள் :- எங்கள் பிரான் - யாம் கூறுகின்ற இறைவன் ; தன் நிலைமை - பிறப்பு இறப்புக்கள் இன்றி என்றும் ஒருபெற்றியனுய் நிற்கின்ற ஒருவனுகிய தனது நிலைமையை ; மன் உயிர்கள் சாரத் தரும் - பலவாகிய உயிர்களும் அடையுமாறு தனது உதவியைத் தருகின்ற ; சத்தி பின்னம் இலான் - சத்தியோடு வேற்றுமையின்றி நிற்பவன்.

'எனவே, அவன் ஒருவனுய் நின்றே பலவற்றினும் நிறைந்துநிற்பான்' என்பது குறிப்பெச்சம்

'மன்னுயிர்களது நிலைமை பிறப்பு இறப்புக்களில் பட்டு உழலுதல்' என்பது காட்சியளவையானே பெறப்படுதலின், அவை அந்நிலைமையினின்றும் நீங்கி அடையப்படுவதாகிய இறைவனது நிலைமை அத்தன்மை இல்லாது என்றும் ஒரு பெற்றியனுய்நிற்றல் என்பது பெறப்பட்டது. " தன் " என்றதனுல், இறைவன் ஒருவனேயாதல் குறிக்கப்பட்டது.

' அகர உயிர் ஒன்ருய் நின்றே பலவற்றிற் செல்லமாட்டாது, அவ்வவற்றிற்கும் வேறு வேருதற்குக் காரணம், அது பிறந்து கெடுதலினுலாம். ஆகவே, அதுபோலப் பிறந்து

கெடுந்தன்மை இறைவற்கு இல்லாமையால், அவன் ஒருவனே யாதலல்லது, பலராதற்குக் காரணம் இல்லை' என்றற்கு, உயிர்களின் வேறுபட்ட அவனது தன்மையைப் பெற வைத்தார்.

'அவ்வாருயினும் ஒருவன் பலவற்றில் நிறைந்துநிற்றல் கூடுவதன்ரும்; அதனுல், ஒருவனுயின் எங்கும் நிறைந்து நிற்றல் கூடாது; எங்கும் நிறைந்து நின்ருனுயின், ஒருவனு தல் கூடாது' என்னும் ஐயத்தினை நீக்குதற்கு, "சத்தி பின்னம இலான்" என்ருர். அஃதாவது, 'ஞாயிறு (பகலவன்) ஒன்றேயாயினும், பலவிடத்தும் பரந்து விரிதற்குரிய கதிர்களை உடைமையால் எங்கும் நிறைந்து நிற்றல்போல, இறைவனும் ஒருவனேயாயினும், எல்லாவற்றினும் செல்லுதற்குரிய பேராற்றலை உடைமையால் பலவற்றினும் நிறைந்து நின்று அவற்றை இயக்குவான்' என்றவாறு.

'இறைவன் ஒருவனுய் நின்றே பலபொருளிலும் நிறைந்து நிற்பான்' என்பதற்குத் திருப்பாடல் மேற்கோள்'

"ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க"

(திருவாசகம் - சிவபுராணம்,)

" நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனுய மைந்தனே டெண்வகையாய்ப் புணர்ந்து நின்ருன்;
உலகே ழெனத்திசை பத்தெனத் தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணேக்கம் ஆடாமோ"

(ஷை - திருத்தோணேக்கம் - 5.)

என்றற் ருெடக்கத்தன.

நின்ற திருத்தாண்டகப் பதிகம் முழுவதினும் "எம் அடிகள்" என்று இறைவனை ஒருவனுகக் குறிப்பிட்டு "இருநிலனுய்த் தீயாகி" என்பது முதலாகப் பல பட அவன் பலவாகி நிற்கின்ற தன்மை விரித்துரைக்கப்பட்டது. வேதத்துள்ளும் திருவுருத்திரமறை, ஒருவனுகிய இறைவன் பலவாகி நிற்றலையே எடுத்தோதித் துதிக்கின்றது.

இறைவனுக்கு உள்ள இவ் ஆற்றல் அறிவுருவானது என்பது முன்னைத் திருக்குறளில், "அறிவாகி" என்றதனுல்

விளங்கிக் கிடந்தது. 'ஆற்றல், சத்தி, வல்லமை' என்பன ஒருபொருட் சொற்கள். அறிவுருவான ஆற்றல், 'சிற்சத்தி' என்றும், அறிவல்லாததாகிய ஆற்றல், 'சட சத்தி' என்றும் வடமொழியில் சொல்லப்படும்.

பின்னம் - வேற்றுமை. 'சத்தியோடு அவனிடை வேற்றுமை இல்லை' எனவே, சத்தி, சத்திமான்களிடையே (ஆற்றலும், ஆற்றல் உடைய பொருளும் என்பவற்றிடையே) எவ்விடத்தும் வேற்றுமை இன்மை பெறப்படும். கதிரும், கதிரவனும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு. இதனால், 'சத்தி சத்திமான்கள், குண குணித் தன்மை உடையவர்கள்' என்பது பெறப்படும். சத்தி குணம். சத்திமான் குணி. கதிர் குணம்; கதிரவன் குணி. இங்குக் குறிக்கப்பட்ட சத்தியை உடைய சத்திமான் சிவம். பத்தி உடையவனை, 'பத்தன்' என்பதுபோல, சத்தி உடையவனை, 'சத்தன்' என்றும் கூறுதல் உண்டு.

'சத்தி குணம்' என்பதும், 'சிவம் அதனை உடைய குணி' என்பதும் மேற்குறித்தவாற்றால் பெறப்பட்டமையாலும், குண குணிகட்குத் தம்முள் வேற்றுமை இன்மையாலும் 'சத்தியும், சிவமும் வேறு வேறு முதல்கள் அல்ல; ஒரு முதலின் இரு தன்மைகளே' என்பது விளங்கும். இதனால், 'சத்தி பெரிதா சிவம் பெரிதா?' என ஐயுற்று வினவுதலும், அதற்கு அவற்றுள் ஒன்றையே பெரிது எனப் பலர் தம்முள் முரணக்கூறி விடுத்துத் தம் கொள்கையை நாட்டுதற்குப் பல காரணங் கூறிப் பூசல் செய்தலும்போல்வன வெல்லாம் சத்தியும் சிவமும் இருவேறு முதல்களல்ல என்பதனை உணராது, இருவேறு முதல்கள் என மயங்குதலால் உளவாவனவே என்க.

சத்திமானே செயலைச் செய்பவனாக, சத்தி அவனுக்குத் துணையாதல் பற்றிச் சிவத்தை ஆண்மகனாகவும், சத்தியைப் பெண்மகளாகவும் வைத்து, அவ்விருவரிடையே மணாளன், மணாட்டி நிலைமையையும், அவர்களது செயலால் பிறப்பெய்தி வாழும் உயிர்களோடு அவர்களிடை மக்களும், பெற்றோருமாம் நிலைமையையும் ஏற்றிப் போற்றும், இறைவனிடத்தில் பேரன்பைப் பெருக்குகின்ற திருப்பாடல்கள் இவ்வுண்மை உணராத காரணத்தாலே புறச்சமயத்தார், 'எம்மைப்போலவே

மனைவியை மணந்து மக்களைப்பெற்று வாழும் உங்கள் சிவ பெருமான் கடவுளாதல் எவ்வாறு' எனக் கடாவி மகிழ்வர்.

'சிவமும், சத்தியும் இருமுதல்கள் அல்ல' என்னும் உண்மையை விளக்கவே சிவபிரான் ஒருடம்பிலே, ஆண், பெண் இருதிறனுய்க் காட்சி வழங்குகின்றுன். இக்காட்சியை எடுத்தோதும் திருப்பாடல்கள் சில வருமாறு:-

" ஒருமை பெண்மை உடையன் " (திருமுறை 1.1.5.)

" ஒருடம் பிருவ ராகி " (திருமுறை 4.22.6)

" புதுவிரி பொன்செய் ஓலை ஒருகாதொர் காது
சுரிசங்கம் நின்று புரள,
விதிவிதி வேத கீதம் ஒருபாடும் ஓத
ஒருபாடு மெல்ல நகுமால்;
மதுவிரி கொன்றை துன்று சடைபாகம் மாதர்
குழல்பாகம் ஆக வருவர்;
இது இவர் வண்ண வண்ணம்; இவள் வண்ண வண்ணம்;
எழில்வண்ண வண்ணம் இயல்பே " (ஷை - 8-10)

" பாதி ஓர் பெண்ணை வைத்தாய் " (திருமுறை 7.20.3)

" பாவை ஓர் கூறுதாங்கிய குழகரோ " (ஷை - 33-1)

" குவளைக் கண்ணி கூறன் காண்க "
(திருவாசகம் - திருவண்டப்பகுதி.)

" தோலும், துகிலும் - குழையும், சுருள்தோடும் -
பால்வெள்ளை நீறும், பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும், தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ "
(ஷை - திருக்கோத்தும்பி. 18.)

சிவம் சத்திகளது தன்மை இதுவாகவே, ஞாயிறு பிற பொருளிடத்துக் கலந்துள்ள நிலையில், 'கதிர்' என்றும், தன்னளவில் நிற்குமிடத்து, 'கதிரவன்' என்றும் சொல்லப் படுதல்போலப் பதிப்பொருள் பிற பொருளிடத்துக் கலந்து நிற்கும் நிலையில் 'சத்தி' என்றும், அவ்வாறின்றித் தன்னள

வில் நிற்குமிடத்து, 'சிவம்' என்றும் சொல்லப்படுகின்றது என்பது விளங்கும்.

இனி, ஞாயிறு கண்ணுக்குப் பிறபொருளைக் காட்டுமிடத்து, 'கதிர்' என்றும், அவ்வாற்றால் காண்கின்ற கண்ணுக்குக் காட்டுவதோடு நில்லாது காணப்படும் பொருளும் தானே யாகின்ற பொழுது 'கதிரவன்' என்றும் சொல்லப்படுதல் போல, பதிப்பொருள் உயிர்களுக்கு அறிவிக்கின்ற நிலையில் 'சத்தி' என்றும், அவ்வாற்றால் அறிகின்ற உயிர்க்கு அறிவித்த லோடு ஒழியாது அறியப்படும் பொருளும் தானேயாய் நிற்கு மிடத்து, 'சிவம்' என்றும் சொல்லப்படும் என்பதும் உணர்க. 'இறைவன், அறிவிக்கின்ற சத்தியாய் நிற்கும்பொழுது அறிவும், அருளுமாய் நிற்பன்' எனவும், 'அறியப்படும் பொரு ளாய் நிற்கும்பொழுது இன்பமாயும், நுகரப்படும் பொருளாயும் நிற்பன்' எனவும் உணர்க. இறைவன் தன்னையே உணர்ந்து நிற்பார்க்கு எல்லையில் இன்பமாக மேலும் மேலும் விளங்குவன் என்பதை,

"ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்"

என்பதனானே அறியப்படும். (சிவஞானபோதம் - சூ. 11. அதி. 1.)

'சத்தி, சிவத்தின் தன்மையை உயிர்கள் சாரச்செய்யும்' என்பதனால், 'அஃது அவ்வாறு செய்தல் வேண்டும்' என்று பதிக்குப் பசுக்கள்மீது உள்ள அருளேயன்றி வேறில்லை' என்பது போந்தது.

"அருளுண்டாம் ஈசற்கு அதுசத்தி அன்றே
அருளும் அவனன்றி இல்லை - அருளின்
றரனன்றே இல்லை அந்நட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து"

எனச் சிவஞானபோதத்தினும் (சூ. 5. அதி. 2.)

"அருளது சத்தியாகும் அரன்றனக்கு; அருளை யின்றித்
தெருள்சிவம் இல்லை; அந்தச் சிவமின்றிச் சத்தி இல்லை;
மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன், கண்கட்
கிருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்"

எனச் சிவஞான சித்தியினும் (சூ - 5. 9.) விளக்கப்பட்டமை காண்க.

"நங்கையினல் நாம்அனைத்தும் செய்தாற்போல்
நாடனைத்தும்
நங்கையினல் செய்தளிக்கும் நாயகனும் - நங்கையினும்
நம்பியாய்த் தான்நடுவே நாட்டப் பெறும்இதுகாண்
எம்பெருமானார் தம் இயல்பு"

என்ற திருக்களிற்றுப்படியாரானும் இச் சத்தி சிவங்களது இயல்பு இனிது உணரப்படும்.

இவ்வாற்ருல் 'இறைவன், பிறப்பு இறப்பு இன்றி நிலை பேறுடையனுதலின், அனைத்தையும் இயக்குதற்கு ஒருவனே ஆதலன்றி வேறுவேருதல் வேண்டா' என்பதும், 'ஒருவனன்றிப் பலர், இல்லாதபொழுது ஒருவனே பலவற்றிலும் நிறைந்து நிற்றல் பெறப்படுதலின், அவ்வாறு நிறைந்து நிற்பதொரு சத்தி அவனுக்கு உண்டு' என்பதும், 'அச்சத்தி மேற்கூறிபவாறு அறிவாதலோடு, அருளும் ஆவது' என்பதும், 'அச்சத்தியினின்றும் சிவன் வேருதலின்றி ஒன்ருனவனே' என்பதும் இதனல் கூறப்பட்டவாறு அறிக.

---

## விசேஷ நாட்கள்

### 10—8—70 முதல் 11—9—70 முடிய

| | |
|---|---|
| 12—8—70 | கலிய நாயனர் திருநக்ஷத்திரம் |
| ,, | கோட்புலி நாயனர் திருநக்ஷத்திரம் |
| 14—8—70 | பிரதோஷம், வரலக்ஷ்மீ விரதம் |
| 15—8—70 | சுதந்திர நாள் |
| 16—8—70 | உபாகர்ம |
| 17—8—70 | காயத்ரீஜபம் |
| 24—8—70 | வேளூர் கிருத்திகை |
| 29—8—70 | பிரதோஷம் சிறுத்தொண்ட நாயனர் திருநக்ஷத்திரம் |
| 30—8—70 | அதிபத்த நாயனர் திருநக்ஷத்திரம் |
| ,, | புகழ்த்துணை நாயனர் திருநக்ஷத்திரம் |
| 31—8—70 | இளையான்குடிமாற நாயனர் திருநக்ஷத்திரம் |
| 2—9—70 | மறைஞானசம்பந்தர் திருநக்ஷத்திரம் |
| 4—9—70 | விநாயக சதுர்த்தி |
| 7—9—70 | குலச்சிறை நாயனர் திருநக்ஷத்திரம் |
| 9—9—70 | குங்குலியக்கலய நாயனர் திருநக்ஷத்திரம் |

# ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்
# காசியாத்திரை அனுபவங்கள்

**திரு. அ. கல்யாணசுந்தர தேசிகர்**

( மலர் 29, இதழ் 8, பக்கம் 246 இன் தொடர்ச்சி )

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகாசந்நிதானத்தில் ஸ்ரீகாசிக்கு முன்னம் பன்முறை எழுந்தருளி யாத்திரை செய்திருந்தாலும் இம்முறை எழுந்தருளியது சிறப்பால் மிக்கது தான். ஒவ்வொருமுறையும் புதுப்புது அனுபவங்கள் வந்துறும். அவ்வப்போதும் அவை மக்களுக்குப் புதுப்புது விளக்கங்களைத் தந்துதவும். அதனை உட்கொண்டே இவ்யாத்திரையின் விளக்கமும் சிறிது தொகுத்துக் கொடுக்க முன்வரலாயிற்று. அவ்வப்போதும் பலரையும் உடனழைத்துச்சென்று பல்லோரும் அதன் உண்மை அனுப்பவத்தை-தாங்கள் காணும் மெய்ப்பொருளை உணருதல் வேண்டும், அனுபவித்தல் வேண்டும், உய்தல் வேண்டும் என்பதே அந்தக் கருணைமூர்த்தியின் திருவுள்ளக்கிடக்கையாகும். தரத்திலும் பலப்பல நிலையில் உள்ளோர் அந்த அருளைப் பெற்றார்கள் ; பெற்றுவருகிறார்கள் என்பதுதான் சொல்லில் பொருத்தமாக அமையும்.

இம்முறை 18—6—1970 அன்று தருமையைவிட்டு எழுந்தருளி 19—6—1970 அன்று சென்னையைவிட்டு நீங்கி பிரயாகை, ஸ்ரீகாசி முதலிய தலங்களில் கங்காஸ்நானம் செய்து, பெருமான் வழிபாடுகளியற்றி பத்து நாட்கள் முறையாக ஸ்ரீகாசியில்தங்கி மீண்டும் அவ்விடம்விட்டு 1—7—1970ல் அகன்று சென்னை வழியாக தருமைக்கு 4—7—1970 அன்று எழுந்தருளியாயிற்று. இந்த நாட்களில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தோடு உடன் இருந்த புண்ணியப்பேறும் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய அருளுரைகளை செவிமடுக்கும் வாய்ப்பும் கிடைத்தன. அவ்வளவையும் குறித்துத் தொகுத்தால் அது ஒரு பெருநூலாகும் எனவே ஒரு சிறிது இயன்ற அளவு எனது சிற்றறிவின் துணைகொண்டு தொகுத்து இப்போது வழங்க முன்வந்துள்ளேன்.

உடன் வந்தவர்களில் சிறப்பாக சிதம்பரம் டாக்டர். உயர் திரு. கே. அரங்கசாமிப்பிள்ளை, சென்னை டாக்டர் உயர் திரு. மா. நடாராஜன், மாயூரம் டாக்டர் உயர் திரு. நாராயணன், பாண்டிச்சேரி டாக்டர். உயர் திரு. P. V. இராமதாசர் அவர்கள், சென்னை வித்துவான், திரு. வடிவேல் பிள்ளை அவர்கள், சிதம்பரம் பெருவணிகர் உயர் திரு பொன்னம்பலம் பிள்ளை அவர்கள், மற்றும் திருமுறைவாணர்கள், சிவாகமபண்டிதர், வேதவிற்பன்னர் ஒருவர், தொண்டர்கள், ஆதீன அலுவலர்கள், பணியாளர்கள், திருச்செந்தூர் போற்றிமார்கள் முதலிய பல்லோருமாக முப்பத்திஞன்கு பேர்கள்.

பொதுவாக டாக்டர்களாக இருப்பவர்கள் அதிலும் மக்கள் விரும்பி வந்து பெருமளவு கூடும் அளவுக்குத் தொழில் வளம் உள்ளவர்கள், நாள் முழுவதும் சுறுசுறுப்பாகப் பணி யாற்றுவோராகவும் அதனையே ஒரு தொழிலாகமட்டும் கருதாமல் அதனையே மக்கள் தொண்டாக முழு மன நிறைவோடு செய்யும் இயல்புள்ளவர்களாகவும் உள்ளவர்களுக்கு அவர்களுடைய அன்புள்ளங்கள் தாங்கள் இல்லாமல் தங்களை எதிர் பார்த்துவரும் மக்கள் வருந்துவார்களே என்று எண்ணியது முதலில். அவர்களும் இல்லறமாகிய நல்லறம் பேணிச் செய்து வருபவர்கள் தாமே. அவர்கள் சுற்றச் சூழலில் சில பல நன்மை தீமைகள் நிகழத்தானே செய்யும்! அதுபோலச் சில. மேலும் தொழில் வளம் பெற்ருல் அதஞல் கடும் உழைப்பும் உழைப்பின் விளைவாக நாளும் ஏற்படும் அயர்வும் உண்டாகுமல்லவா? அவர்களும் மனிதர்கள் தாமே. அந்தஅயர்வு போக்கிக்கொள்ள நவீன வசதிகள் எல்லாம் - குளிர் சாதனம் பொருத்தப்பட்ட தனி அறைகள் போன்ற இக்கால வாழ்க்கைநிறைவுகள் எல்லாம் நிரம்பப்பெற்று அதனில் அமர்ந்து அயர்வு போக்கிப் பழக்கப்பட்டவர்கள். வெளியூர்களுக்குச்செல்வதாஞலும் இதேநலத்துக்குக்குறையாதுஎல்லா நலன்களும் பொருந்தச்சென்றுவரும் இயல்பும் உடையவர்கள். அவர்களிடம் " வடநாட்டில் கோடைக் காலங்களில் கடும் வெப்பம் மிகுதியாக இருக்கும். தாங்கள் அங்குச் சென்று இந்த வசதிகள் இல்லாமல் ஒருசேர பத்து நாட்கள் தங்க எவ்விதம் இயலும். தங்களுக்கு அது ஒத்துவருமா" என்று அவர்கள் உடல்நலம் ஒன்றையே கருதும் அன்பர்கள் சொல்ல முன்வந்தனர்.

அவர்களுடைய உறவினர்களில் சிலருக்கு உடல்நிலை கவலைக்கிடமாக இருந்தது. அவர்களுக்குச் சிகிச்சையும் அளித்தல் வேண்டும்; மிகவும் மோசமான நிலையில் உள்ளவர் ஒருவர் "தாங்கள்தான் எனக்குச் சிகிச்சை செய்தல் வேண்டும். கடைசிக்காலத்தில் தாங்கள் என் பக்கத்தில் இருந்தால் எனக்கு மனதுக்கு ஆறுதலாக இருக்கும்" என்று கேட்டுக் கொள்ளலானர். உறவின் முறையல்லாது நோயாளியாகவும் இருக்கும் நிலையில் இதுபோன்ருர்க்கு எவ்விதம் அவர்கள் வேண்டுகோளை மறுக்க இயலும் என்ற சஞ்சலமும் அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது. 'ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தில் தம்மிடம் உள்ள அன்பு - தம்முடைய உடல் நலம் உயிர்நலத்தில் மற்ற எவரையும்விட அன்பு குறைவுடையது இல்லை;ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் தமது பாரததேசத்தின்எல்லாப்பகுதிகளுக்கும்சென்றுகண்டுவந்தவர்கள். அவர்களுக்கு எந்தப்பருவத்தில் எந்தெந்தப் பிரதேசத்தில் எவ்வெவ்விதம் இருக்கும்; அது எவ்விதம் தமது உடல் நிலையைப் பாதிக்கக்கூடும் என்பது தெரிந்தவர்கள்தாம். எல்லாவற்றுக்கும் மேலாக நமது ஆன்ம நலம் மேம்பட வேண்டும்; உலகியல் நலமெலாம் மேன்மேலும் நமக்குப் பெருகவேண்டும் என்று நாளும் சிந்திப்பவர்கள், ஆகவே அவர்கள் அழைக்கிருர்கள் என்ருல் உடனே அவர்கள் உத்தரவுக்குப் பணிந்து நடந்துகொள்ளுதல்தான் நம் நலத்துக்கு ஏற்றதாக இருக்கும். ஏதோ ஒரு குறிக்கோளோடுதான் நம்மை அழைக்கிருர்கள்' என்று அவர்கள் உள்மனம் சொல்லிற்று. இது அவர்களுக்கு ஒரு உறுதியை உண்டாக்கிற்று.

யாத்திரை புறப்படுவது என்று உறுதிசெய்துகொண்டு மனத்தைத் தளரவிடாது அதற்கேற்ற ஏற்பாடுகளைச்செய்யத் தலைப்பட்டார்கள். தம்மை நாடிவரும் நோயாளிகளிடமும் தாம்ஊரில்இல்லாதநாட்களில் எவ்வெவ்விதம் செய்துகொள்ள வேண்டும் என்பவற்றை எடுத்து விளக்கமாகச் சொல்லி அதற்கு மேலாக வைத்திய உதவியை நாடவேண்டி ஏற்பட்டால் தமது மருத்துவ விடுதியில் இன்னின்ன வகையாகத் திட்டம் செய்து வைக்கப்பட்டிருக்கிறது என்பதனையும் சொல்லித் தேற்றினர்கள். மேலே சொன்னபடி கவலைக்கிடமாக உள்ள அன்பருக்கு உலகியல் முறையிலும் ஆன்மார்த்த நிலையிலும் இதமான பல வார்த்தைகளை எவ்விதம் பக்குவ

மாகச் சொல்லமுடியுமோ அந்தவகையில் சொல்லி அவர்களை யும் தேற்றி, அவர்கள் எல்லோரும் எதிர்பார்க்கிறபடி ஏதாவது நேர்ந்துவிட்டாலும் அந்த நேரத்தில் தம் உற்றுர் ஸ்ரீகாசியில் இருக்கிருர்கள் என்ற நினைப்பே அவர்களுடைய ஆன்மா கடைத்தேற எவ்விதம் உதவும் என்பதையும் ‘உலகம் தோன் றிய காலம்முதல் வழிவழியாக தந்தை மகன் என்ற முறையில் எத்தனையோபேர்கள் வந்துவந்து மறைந்துகொண்டேதான் இருக்கிருர்கள்; இதுதான் உலக நியதி. நாம் பெற்ற செல் வங்கள் நல்ல நிலையில் இருப்பதைக்கண்டு மன ஆறுதல் பெற்று அந்த மகிழ்வோடு கண்மூடும் பாக்கியம் இருப்பதைப் பெரும் பாக்கியமாகவே கருதவேண்டும். இத்தனை ஆண்டுகள் இவ்வுலகில் சீரும் சிறப்புமாக வாழ்ந்தவர்கள் கடவுளையே நம்பி இருக்கும் ஆஸ்திக சிந்தனை உடையவர்கள் இவ்விதம் தாமும் கலக்கமுற்று, பிறருக்கும் கலக்கத்தை உண்டுபண்ணு வதுசிறப்பாகாது’ என்பதனை அவர்கள் உளங்கொள்ளும் வகையில் எடுத்துச்சொல்லி, அவர்களே ஆன்ம பாதுகாப்பாக உள்ள குருமகாசந்நிதானத்தோடு தம்மைச் சேர்ந்தவர்கள் யாத்திரை செல்லுவது ஒரு பெரும் பாக்கியம் என்று தேறி வழியனுப்பும் அளவுக்குச் செய்துவிட்டார்கள்.

இந்தப் பெரும் டாக்டர்கள் உலகில் பல பகுதிகளுக்கும் பலமுறை சென்றுவந்தவர்கள்தான் தங்கள் வசதி ஒரு சிறிதும் குறையாத நிலையில் சென்றுவரக்கூடிய பொருள் வசதியும் உடையவர்கள்தாம். உலகியலில் எவ்வளவு உயர்ந்த சிறப்புக்கள் இருந்தாலும் அவ்வளவும் நிலையாதனதல்ல; உயிருக்கு உறுதி அளிப்பதல்ல. உலகியல் சிறப்புக்கள் எவ்வளவு மிகுதியாக இருந்தாலும் ஆன்மநலத்துடன் அதுவும் கூடிப் பெருக வாழும் வாழ்வே சிறந்தது. அதற்கு உறுதுணையாக வழிகாட்டியாக உள்ள ஒரு குருமுதல்வர் சொல்லும் சொல்லே தம் ஈடேற்றத்துக்கு நம் நல்வாழ்வுக்கு ஆன்ம இயலிலும் உறதுணையாவது என்பதைத் தம் வாழ்வின் அனுபவமாகக் கண்டு கொண்டவர்கள். ஆகவே அவர்களும் உடன்வர முன்வந்தார்கள். இயல்பாகவே அவர்கள் வைத்தியம்செய்யும் காலத்திலும் தம்முடைய வைத்தியத்துறைப் படிப்பு, அனு பவத்திறன் வேகமாக வளர்ந்துவரும் உலகியில் நுட்பத் திறன்கள் எல்லாம் பொருந்த உண்மை ஆர்வத்தோடு அறுவை முதலியவை செய்தாலும் தம்முடைய செயலால்

மட்டும் அது முழுப்பயனையும் அளித்துவிடாது, தம்மிடம் பரிகாரம் பெறும் அந்த உடலுக்கும் உயிருக்கும் காவலாக எல்லாவற்றுக்கும் மேலான பெரிய வைத்தியனாக உள்ள இறைவன் துணையும் அருளும் உடன் நின்று காத்தருள வேண்டும் என்றும் அவ்விறையருளை வேண்டி நிற்பார். அந்தத்துணையே உண்மையான துணை என்பதனையும் அனுபவத்தால் கண்டவர்கள். அந்த நல்லுணர்வு அவர்களுக்கு இதுபோன்ற வைதிக யாத்திரையிலும் அதில் ஏற்படும் அனுபவங்களிலும் அவர்களை மகிழ்ச்சியோடு இருக்கப்பெரிதும் உதவியது. இவ்வளவும் எல்லாவிதத்திலும் சிறப்புமிக்க வைத்தியர்களாக விஞ்ஞானத்தையே துணைகொண்டு நமது வைத்தியர்கள் தொழில்செய்கிறார்கள் என்றுமட்டும் எண்ணி வருபவருக்கு நாம் ஏதேது செய்தாலும் ஏதேதுசிந்தித்திருந்தாலும் அவர்கள் உள்ளம் இறைவன் துணையையே அவன் திருவருள் நலத்தையேநாடிநிற்கும்;எவ்விதமாறுதலும் இராது என்பதை விளக்கவே இவர்களைப்பற்றி இவ்வளவு விளக்கமாக எடுத்துச் சொல்ல முற்பட்டது.

இவ்யாத்திரை குறித்து அதற்கான திட்டம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தின் 25 ஆவது ஆட்சி ஆண்டு நிறைவுநாளன்றேஉருவாயிற்று. அந்த நல்விழாவை ஒருதனி விழாவாக நடத்த ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் இடந்தரவில்லை. இவர்கள் திருவுள்ளத்தில் என்ன உதயமாயிற்று, அது ஏன் இடம்தர மறுத்தது என்பனவெல்லாம் யாருக்கும் விளங்கவில்லை முதலில். ஆனால் வீண்பெருமை விரும்பாத அவர்கள் எது செய்தாலும் அதனில் ஒரு தனி உண்மையிருக்கும். அதனைச் சொல்லால் சொல்வதில்லை. செயலில்தான் உய்த்துணர இயலும். பாராட்டு என்றபெயரில் வார்த்தை அளவில் போய்விடக் கூடியதில் அவர்களுக்கு விருப்பம் இருப்பதில்லை. இந்த நல்ல நேரத்தை நல்ல சிவசிந்தனையிலும் அவ்வழிபாட்டிலும், சிவதல யாத்திரையிலும் செலவிட்டால் அது தமக்கும் தம்மை நாடிவருவோருக்கும் உய்வளிக்குமென்பது அவர்கள் தெளிந்த திருவுள்ளத்தில் நிலைத்து நாளும் பெருகிவருமொன்று என்பதை அவர்களோடு உடன் பழகும் வாய்ப்புள்ளவர்களுக்குத் தெளிவாகத்தெரியும். அதன் விளைவாக நிகழ்ந்ததுதான் இந்தப் புனிதயாத்திரை. இனி யாத்திரையின் விளக்கம்.

(தொடரும்)



# செய்திகள்



## தருமையில் குருபூஜை விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 24-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் 25 ஆவது ஆண்டுக் குருபூஜைவிழா 13—6—70 சனிக்கிழமையன்று மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது. காலை மாலை இரு வேளைகளிலும் குருமூர்த்த ஆலயத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. மாலை வழிபாட்டிற்கு முன்னர் பழம் முதலியன வைக்கப்பெற்ற 24 தட்டுகள் நாதசுர இன்னிசை, எடுபிடிகள் முதலியவற்றுடன் அன்பர்களால் வீதிவலமாக எடுத்து வரப்பெற்றன. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் காலை மாலை இரு வேளைகளிலும் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு பிரசாதம் முதலியவற்றை வழங்கியருளினார்கள். குருபூஜை விழாவைக் குறித்து சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள் ஆதீனக்கல்லூரிப் பேராசிரியர்கள், A.V.C. கல்லூரி விரிவுரையாளர்கள், ஆதீன உயர்பள்ளி ஆசிரியர்கள் ஆதீன ஓதுவாமூர்த்திகள் முதலியவர்கள் தருமையாதீன பண்டார சாத்திர நூல்களைத் தலைப்புக்களாகக்கொண்டு சொற்பொழிவாற்றினர். மாலையில் சூலமங்கலம் சகோதரிகளின் இன்னிசை நிகழ்ந்தது. அன்பர்கள் பலர் கலந்துகொண்டு குருவருளும் திருவருளும் பெற்றுய்ந்தனர்.

## வேளூரில் சம்வத்சராபிஷேகம்

வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் சென்ற சௌமிய ஆண்டு ஆனித்திங்கள் 18 ஆம் நாள் (2—7—69) புதன்கிழமை அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் மிக்க சிறப்புடன் நிகழ்ந்ததை அன்பர்கள் அறிவர். அதை ஒட்டி, இவ்வாண்டு ஆனித்திங்கள் 8 ஆம் நாள் (22—7—70) திங்கட்கிழமையன்று சம்வத்சராபிஷேகம் நடைபெற்றது பஞ்சமூர்த்திகளுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் சிறப்புற நிகழ்ந்தன. மாலை ஸ்ரீ வைத்தியநாதப்பெருமானுக்குப் பஞ்சமுக அர்ச்சனையும். ஸ்ரீ தையல்நாயகி அம்பாளுக்கு நவசக்தி அர்ச்சனையும். ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்கும், ஸ்ரீ ஆறுமுககுமாரருக்கும் சண்முக அர்ச்சனையும் இரவு பஞ்சமூர்த்திகள் திருவீதியுலா சிறந்த நாதசுர இன்னிசையுடனும் சிறப்புற நடைபெற்றன. அன்பர்கள் பலர் கலந்துகொணடு வழிபட்டு உய்ந்தனர்.




திரு. K. முத்துஜோதிடர்

(சாதாரணஸு ஆவணிமீ 1உ முதல் 30உ முடிய)
(17—8—70 முதல் 18—9—70 முடிய)

சாதாரணஸு ஆவணிமீ 1உ சோமவாரம் பௌர்ணிமை 9 நாழிகை 14 விநாடியும் அவிட்ட நக்ஷத்திரமும் கூடிய சுப தினத்தில் லோக பிரகாசகருமான ஸ்ரீ சூரியபகவான் சிம்ம ராசியில் தனது கிரகத்துக்கு காலே 1 நாழிகை 51 விநாடிக்கு பிரவேசம் செய்கிறார். 'பிராத: காலம் பவேத்' என்கிற வசனப்படி ஆவணியில் விவசாய காரியங்கள் ரொம்ப மும்மரமாக நடந்துகொண்டும் மத்திய காலங்களில் அடிக்கடி மழை இருந்து கொண்டும் நதியில் சிராக ஜலம் வந்துகொண்டும் இருக்கும். சஸ்ய தான்ய விருத்தி ஏற்படும்.

### 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் சுபத்தைத்தரும். வியாதி நீங்கும். நஷ்டமான பொருள் வந்துசேரும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். கீர்த்திபத்திரம் கிடைக்கும். சஞ்சாரம் வெற்றியைத் தரும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

### 2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். ஜீவனம் ஓங்கும். ஆரோக்யம் உண்டாகும். நிலையான குடும்பம் ஏற்படும். தெய்வபலம் காக்கும். அடிக்கடி சுபகாரியங்கள் ஏற்பட்டுக்கொண்டு இருக்கும். புதன், வியாழன் சுபமாகும்.

### 3. மிதுனம் – மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். வரவு செலவு சமமாக இருக்கும். சஞ்சாரங்கள் ஏற்படும்.

வித்யை விருத்தியாகும். மேலோர்களின் அன்பு கிடைக்கும். வெள்ளி, சனி சுபமாகும்.

4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.

கடகராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபபலனைத்தரும். ஜீவனம் ஓங்கும். விவசாயம் விருத்தியாகும். சுப சோபனாதிகள் ஏற்படும். தேவதா குருபத்தியும் மேலோர்களின் அன்பும் ஏற்படும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼.

சிம்மராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். இடம் மாறுதல்செய்து நன்மையை உண்டுபண்ணும். குடும்பம் ஓங்கும். உத்தியோகத்தில் விசேஷமான நன்மைகள் ஏற்படும். சிநேகிதர் மூலம் நன்மை உண்டாகும். ஆரோக்யம் உண்டாகும். செவ்வாய், புதன் சுபமாகும்.

6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½.

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். அடிக்கடி சஞ்சாரம் ஏற்படும். தெய்விகமான காரியங்களும் மேன்மேலும் விருத்தியாகும். உலகபிரசித்தி ஏற்படும். தெய்வ சக்தி ஓங்கும். மத்தியகாலங்களில் கொஞ்ச ஆரோக்யக் குறைவும் காரியங்களில் விக்னமும், உண்டுபண்ணி தெய்வபலத்தால் நன்மை உண்டாகும். வியாழன் வெள்ளி சுபமாகும்

7, துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

துலாராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். வரவு செலவு சமமாக இருக்கும். மத்திய காலங்களில் ஆரோக்யக் குறைவு ஏற்படும் நஷ்டமான பொருள் தானாக வந்துசேரும். விவகாரம் ஜெயிக்கும். ஜீவனம் ஓங்கும். சனி, ஞாயிறு சுபமாகும்.

8. விருச்சிகம் – விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும்; ஜீவனம் விருத்தியடையும் ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் லாபத்தோடு கிரய விக்ரயங்கள் ஏற்படும். இடம்மாறச் செய்யும். மேல்பதவி கிடைக்கும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராடம் ¼.

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். இல்லறம் ஓங்கும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். ஜீவனம் விருத்தியாகும். நஷ்டமான பொருள் கொஞ்சம் கொஞ்சமாகக் கிடைக்கும். வரவு செலவு சமமாக இருக்கும் புதன், வியாழன் சுபமாகும்.

10. மகரம்– உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½

மகரராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். உத்தியோகத்தால் விசேஷமான கீர்த்தி உண்டாகும். எதிர் பாராத லாபங்கள் உண்டாகும். நூதன வஸ்திராபரண சேர்க்கை ஏற்படும். மனம் சாந்தி அடையும். சகல காரியங்களும் சித்தியாகும். வெள்ளி, சனி சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் ½ – சதயம் – பூரட்டாதி ¾,

கும்பராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அடிக்கடி சரீரத்தில் ஆரோக்யக்குறைவு ஏற்படும். உடனுக்குடன் வியாதி நிவர்த்தியாகும். குடும்பம் ஓங்கும். ஜீவனம் விருத்தியாகும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.

மீனராசி 9 பாதங்களும். சுபத்தைத்தரும். ஆரோக்யம் உண்டுபண்ணும். குடும்பம் ஓங்கும். படிப்பு விருத்தியாகும். மேலோர் பெரியோர்களின் அன்பு கிடைக்கும். தெய்வபலம் முன்னின்று காக்கும். செவ்வாய், புதன் சுபமுண்டாகும்.

குறிப்பு :- ஆவணி பிரவேச லக்கின ரீதியாக ராஜா செவ்வாய் சுபபாக்கியாதிபத்தியம் கிடைத்து கடகத்தில் பிரவேச லக்கினத்துக்கு 12ல் நீசமடைந்தும், மந்திரி சந்திரன் லக்கினத்தில் இருந்துகொண்டும் சுக்கிரனுக்கு ஆதிபத்தியமே இல்லாமல் பிரவேச கிரகத்துக்கு நீச ஸ்தானத்தில் ஜீவனாதிபதியாய் இருந்துவருவதாலும் பிரஜைகள், விவசாயிகள் ரொம்ப கவலையுடன் சஸ்யதான்ய விருத்திகளை செய்யவேணும். பல விக்னங்கள் காட்டும். தெய்வபலம் இருக்குமிடத்தில் அதிக சிரமமில்லாமல் சஸ்யதான்ய விருத்தியாகும். காவேரிதீரம் தர்பபூமிகள் செழிக்கும். கடவுள் காப்பார் சென்ற மாதம் போலவே விந்தியோத்தரதேசம் அந்நிய நாடுகள் இயற்கை கோளாறுகளாலும் மானுஷாத்புதத்தாலும் பாதிக்கப்படும். பூர்ணமாண தெய்வசக்தியை பிரார்த்தித்தால் ஜயிக்கும். பயம். நீங்கும். கடவுள் காப்பார்.

மதிப்புரை :

'குமரி மாவட்டக் கோவில்கள்' என்ற கட்டுரை நூல் வரப் பெற்றோம். இஃது ஒரு வரலாற்றுச் சமய நூல் என்பது மட்டு மன்று; தென்தமிழ் நாட்டுப் பயணிகளுக்கு ஓர் வழிகாட்டியு மாகும். இமயம் முதல் குமரி வரையில் பரவிநிற்கும் பழம்பெரு நாடாகிய பரதகண்டத்தை, வடக்கில் கண்ணுதற் கடவுளும். தெற்கில் குமரி தேவியும் அப்பனும், அம்மையுமாய் நின்று காத்து வருகின்றார்கள். குமரி, கோயில் கொண்டுள்ள இடத் தைச் சூழ்ந்த இடமே இன்று, 'குமரி மாவட்டம்' எனப்படு கின்றது. முக்கடல் கூடும் குமரிமுனைத் தீர்த்தத்தில் நிராடிப் பயன்பெற இந்திய நாட்டின் பல பாகங்களினின்றும் வருவோர் இம்மாவட்டத்திலுள்ள கோவில்கள் அனைத்தையும்கண்டு வழிபட விரும்புவது இயல்பே. அவர்கட்கு இந்நூல் சிறந்த துணை யாகும். கோயில்களின் பழைய வரலாறு, இன்றுள்ள அமைப்பு. செல்லும் வழி முதலிய பலவற்றுடன் வரலாற்றுக் குறிப்புக்களும் இதன்கண் அமைந்துள்ளன. தெளிவான உரைநடையில் அமைந்துள்ள இந்நூலில் ஆசிரியரது ஆராய்ச்சித்திறன் நன்கு வெளிப்படுகின்றது எனவே, குமரி மாவட்டக்கோயில் கள் பற்றி நன்கு அறிதற்கும், நேரில் சென்று வழிபடுவதற்கும், இந்நூல் பெரிதும் உதவியாகும் என்பது உறுதி. 'விலை ரூபா 4—00' என்று குறித்துள்ளது. ஆசிரியர் :- திரு. எஸ். பத்மநாபன் பி. எஸ்சி. அவர்கள், ஸ்டேட்பாங்கு, நாகர்கோயில்

துணையாசிரியர்.

---

## குமரகுருபரன்

தருமையாதீனத்து முனிபுங்கவரும், ஸ்ரீ காசி மடத்து முதல்வருமான ஸ்ரீலஸ்ரீ குமரகுருபர சுவாமிகளினுடைய திருப்பெயர் பூண்டு, சமயம், இலக்கியம், அறம் முதலிய வற்றை எளிய நடையில் தெளியச் செய்யும் ஆராய்ச்சிவிளக் கத்துடன் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களது ஆணையின் வண்ணம் உயரிய இவ்விதழ் வெளிவருகிறது.

ஆண்டுச் சந்தா :- ரூ. 3—00

விலாசம் :— நிர்வாக ஆசிரியர்.

உயர்திருவாளர், T. M. குமரகுருபரன் பிள்ளை
B. A., B L., அவர்கள்
குமரகுருபரன் ஆபீஸ், ஸ்ரீவைகுண்டம்.

தருமையாதீ[illegible]சொந்தமான புள்ளிருக்குவேளூர்

# ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்

# மகாகும்பாபிஷேக விழா மலர்

தென்னாட்டில் மிகச் சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்குவது புள்ளிருக்குவேளூர். சம்பாதி, சடாயு, இராம இலக்குமணர், வேதம், முருகன், சூரியன் முதலியோர் வழிபட்ட பெருமையுடையது. இறைவன், தீராநோய் தீர்த்தருள்கின்ற வைத்தியநாதனாக விளங்குகின்றான். முருகன் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி என்ற திருப்பெயரொடு கண்கண்ட தெய்வமாய் விளங்கிவருகின்றார். ஞானசம்பந்தர், நாவுக்கரசர், முதலிய அருளாளர்கள் பலரும் பாடிப் பரவிய திருத்தலம். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூவகையாலும் சிறப்புற்ற இத்தலத்திருக்கோயிலைத் தருமையாதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இராஜகோபுரங்கள், விமானங்கள் முதலிய அனைத்தையும் புதுப்பித்து 2—7—69 அன்று ஜீரணோத்தாரண அஷ்டபந்தன சுவர்ணபந்தன மகாகும்பாபிஷேகம் செய்வித்தருளினார்கள். கும்பாபிஷேக விழாவின் சிறப்பு மலர்இது இம்மலர் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களது வாழ்த்துரையுடனும், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் முதலியோர் வழங்கியருளிய வாழ்த்துச் செய்திகளுடனும் வெளிவருகிறது.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், திருமுறை, சாத்திரம், தோத்திரம், இலக்கியம், கலை, சமயம், வாழ்வியல், திருக்கோயில், மருத்துவம், கல்வெட்டு ஆகிய பல தலைப்புக்களில் அறிஞர்கள் பலர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் இம்மலரை அணிசெய்கின்றன. டிம்மி 1 x 4 ஆர்ட் படங்கள் வெள்ளை கிளேஸ் காகிதங்கள். பக்கங்கள் 534. விலை ரூ 14—00. பதிவஞ்சல் கட்டணம் ரூ. 4—00.

கிடைக்குமிடம் :— டிரஷரர். ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம், வைத்தீஸ்வரன்கோயில், தஞ்சைமாவட்டம், தமிழ்நாடு.

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—8—70.